
வேற்றுகிரகவாசியை
சந்தித்தேன்...
அ.தமிழ்ச்செல்வன்

# வேற்றுகிரகவாசியை சந்தித்தேன்....

## - அ.தமிழ்ச்செல்வன்

a.tamilselvan42@gmail.com

அட்டைப்படம் : அ.தமிழ்ச்செல்வன்- a.tamilselvan42@gmail.com

மின்னூலாக்கம் :சீ.ராஜேஸ்வரி - sraji.me@gmail.com

வெளியீடு : FreeTamilEbooks.com

# உள்ளடக்க அட்டவணை

# நூல் அறிமுக உரை

எல்லாகருத்துகளும்  நூல் ஆசிரியருடயவையே

இந் நூலில் உள்ள கட்டுரைகள் வேற்றுகிரக வாசிகளை பற்றிய எனது தேடலின் தொகுப்பு. அவ்வப்போது வேற்றுகிரக வாசிகளை பற்றிய தகவல்களின் போது சேகரிகப்பட்ட தகவல்களின் அடிப்படையில் நான் எழுதிய கட்டுரைகள். திண்டுக்கல் மாவட்டம் வத்தலக்குண்டிலிருந்து வதிலை பிரபாவை ஆசிரியராக கொண்ட மகாகவி இதழிலும்,மதுரையிலிருந்து வெளிவரும் தமிழ் வாசல் உள்ளிட்ட இதழ்களின் வெளிவந்த கட்டுரைகளின் தொகுப்பே "வேற்றுகிரவாசிகளை சந்தித்தேன" - என்ற தலைப்பில் மின் நூலாக வெளிவருகிறது.

கட்டுரைகளாக வெளியிட்ட இதழ்கள் ஆசியர்களுக்கும் , தற்போது எனது கட்டுரையை

மின் நூலாக வெளியிடும் *freetamilebooksteam* க்கு எனது நன்றிகள்.

# நூல் ஆசிரியர் அறிமுக உரை

சிறுவயதில் கடவுள் எங்கே இருக்கிறார் ? என்ற கேள்விக்கு வானத்தை காட்டுவார்கள்.. சிலர் வானத்தை நோக்கி வணங்குவார்கள். வானத்தை வெறித்து பார்த்து கொண்டிருந்த எனக்கு கடவுள் அங்கு இல்லை என தெரியத்துவங்கியது. சரி வேறு என்னதான் வானத்தில் இருக்கிறது... என்ற தேடலில் நாம் வாழும் பூமியை போல பல கிரகணங்கள், நட்ச்சதிரங்கள்,கேலக்ஸிக்கள்,கருந்துளைகள் என முடிவுற்ற அதே நேரத்தில் ஆச்சர்யங்கள் நிறைந்த பிரபஞ்சம் எனக்கு முன் விரிந்தது. நம்மை போன்ற மனிதர்களும் இருக்கலாம் என்ற தகவல் கிடைத்த போது திகைத்து போனேன். கிட்டதட்ட 25 ஆண்டுகள் வேற்று கிர மனிதர்களை பற்றி தகவல்களை தேடித்தேடி சேகரிக்க தொடங்கினேன். அதில் உண்மைக்கு

பக்கத்தில் அனைவராலும் ஏற்றுக்கொள்ளும் தகவல்களை கொண்டு எழுத துவங்கினேன்.

அப்படி நான் இதுவை எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு இந்நூல். நேரில் வேற்றுகிரகமனிதர்களை சந்திக்கும் வரை தேடல் தொடரும்..

***- அ.தமிழ்ச்செல்வன்.***

# பிரபஞ்சத்தில் உயிரைத் தேடி...

*மின்சாரம் தடைப்படுகிற இரவு நேரம்; மொ ட்டை மாடியில் நின்று கவனித்தால் நமக்குமு ன் எல்லையற்ற விரிந்து பரந்துள்ள பிரபஞ்சத் தில் நட்சத்திரங்களின் கண்சிமிட்டல்கள் அற் புதமானது. சப்தரிசி மண்டலம், ஓரியன் மண்ட லம், கார்த்திகை நட்சத்திரக் கூட்டம், வெண்ப னி போன்ற "ஆகாயகங்கை" என்று அழைக் கப்படுகிற மில்கிவே என கண்கொள்ளா கா ட்சி. நமக்கு முன் உள்ள இந்த வெளியில் உயிர் களைத் தேடுவோம்.*

***பிரபஞ்சத் தனிமையில் நாம்....***



நீண்ட நெடுங்காலமாகவே வானவியல் விஞ் ஞானிகளுக்கு ஒரு `பிரபஞ்சத் தனிமையில்' இந்த உலகம் இருக்கிறதா என்ற கேள்வி ஏற்பட்டது. இந்த பரந்த பிரபஞ்சத்தை ஆராயவும், தெரிந்து கொள்ளவும்  நாம் மட்டுமே முயற்சி செய்கிறோமா, நமக்கு துணையாக வேறு கிரக வாசிகள் இல்லையா என்ற ஆதங்கம் இருக்கிறது.

பிரபஞ்சத் தனிமை ஒரு பக்கம் இருந்தாலும், உயிர் தேடலில் மற்றொரு விசயமும் அடங்கி

யுள்ளது. கொஞ்சம்,கொஞ்சமாக பூமிக்கு வயது ஆகிக்கொண்டே போகிறது. அதோடு நாமும் பூமியை ஒரு கழிவுகளை கொட்டும் இடமாக மாற்றிவிட்டோம். இதனால் பூமி மனிதர்கள் வாழத் தகுதியில்லாத இடமாக மா றிவருகிறது. எதிர்காலத்தில் மனித இனம் தளைக்கவேறுஒரு இடம்(கிரகம்) வேண்டுமே.

இது போன்ற தேவைகளைப் பூர்த்தி செய்ய விஞ்ஞானிகள்செயற்கைகோள்களையும், `கலீலியோ' போன்ற வானில் மிதந்த கொ ண்டே ஆராய்கிற டெலஸ்கோப்புகள், பூமி யில்அமைக்கப்பட்டுள்ள மிகப்பிரமாண்ட மான டெலஸ்கோப்புகளை கொண்டு இந்த பிரபஞ்சத்தை துருவித்துருவி ஆராந்து கொ ண்டிருக்கிறார்கள்.

**உயிர் என்பது என்ன ....**



உயிர்களைத் தேடுவதற்கு முன்னால் உயிர் என்பது என்ன என தெரிந்துகொள்வோம். 'புரதப்பொருட்களின் புதிர் வடிவமே உயிர்' என்கிறார்கள் விஞ்ஞானிகள். இவை போக இன்னும் சில நிபந்தனைகளும் உண்டு.

*1. டி.என்.ஏ (டி ஆக்ஸிரிபே நியூக்ளீக் அமிலம்), ஆர்.என்.ஏ (ரீபோ நியூக்ளீக் அமிலம் கொண்டதாக இருக்க வேண்டும்*

*2. இனப்பெருக்கம், உறுப்பசைவு, நகர்தல் இருக்கவேண்டும்.*

*3.ஒரு உயிர் மற்றொரு உயிராக மாறுதல் அடையவேண்டும்(பரிணாமம்)*

*4.வளர்ச்சிதைமாற்றம்.*

*5.வேதிமாற்றம் போன்ற செயல்பாடுகள் இருக்கவேண்டும்.*

*உயிர் என்றால் என்ன எனப் பார்த்தாயிற்று.*

**உயிர் உருவாகும் சூழ்நிலைகள்...**

*உயிர் உருவாக என்ன மாதிரியான சூழ்நி லைகள் வேண்டும். ஒரு கிரகத்தின் சூழ்நிலை யை மாற்ற இயலாதவை, மாற்றக்கூடியவை  என இரண்டு விதமாக பிரிக்கலாம். ஒரு கிரகம் சூரியனில் இருந்து உள்ள தொலைவு, சுழற்சி வேகம்,நாள் சலனம், ஆண்டு சலனம், சுழற்ச்சி ஆச்சின் சரிவு, நிறை, ஆரம், சுற்றும் பாதை இவை மாற்ற இயலாதவை. மாற்றகூடிய சூழ்நிலைகள் என*

சில உண்டு. மனிதனின் வி ஞ்ஞான முயற்சியால் ஒரு கிரகத்தின் வளிம ண்டலம், வளிமகலவை, அழுத்தம், தட்பவெ ப்பம், ஈரப்பதம் இவற்றை மாற்றலாம்.

இந்த விதிமுறைகளுக்கு உட்பட்டு நமது சூரியமண்டலத்தில் உயிர் வாழத் தகுதியான, அல்லது ஏதேனும் புதிய உயிர்கள் வாழ்கி ன்றதா எனத் தேடுவோம்.

## நமது சந்ததியினர் வாழ ஏற்ற கிரகம்...



*வேற்று கிரகங்களில் உயிர்தேடல் என பேச ஆரம்பித்தாலே நமக்கு முதலில் தோன்றுவது செவ்வாய் கிரகமாகத்தான் இருக்கும். நமது சூரியமண்டலத்தில் பூமியை அடுத்த நான்கா வது கிரகமாகும். கிட்டதட்ட பூமியின் பரப்ப ளவு கொண்டது. தன்னைத்தானே சுற்றிக்கொ ள்ள 24 1/2 மணிநேரம் ஆகிறது. சூரியனை சுற்ற இரண்டு வருடங்கள் (பூமி வருடங்க ளில்). தைமாஸ், போபாஸ் என இரண்டு சந்தி ரன்கள். தைமாஸ் 16 கிமீ சுற்றளவு, போபாஸ் 28 கிமீ. சுற்றளவு கொண்டது. தைமாஸ் செ வ்வாயை கிழக்கிலிருந்து மேற்காகவும், போ பாஸ் மேற்கிலிருந்து கிழக்காகவும் சுற்றுகி ன்றன. செவ்வாயின் மேற்பரப்பு இயக்கமற்று காணப்பட்டாலும் எரிமலை வெடிப்புகள் அவ்வப்போது நிகழ்கின்றன. செவ்வாயின் அதிகாலைப் பொழுது பூமியின் காலை பொழுதைப்போலவே மெல்லிய பனிப்பட லத்துடனேயே துவங்கிறது. மிக மெல்லிய காற்றுமண்டலம் அதில் குறைந்த அளவில் ஆக்ஸிஸன், கார்பன்டை ஆக்ஸைடு, நைட்ர ஜன்*

உள்ளது. ஒரு காலத்தில் ஆறுகள் ஒடி வற்றிப்போன கிரகமாக செவ்வாய் காட்சி யளிக்கிறது. பாத்பைன்டர் ஆய்வுகள் செவ்வா யின் மையப்பகுதியல் செய்யப்பட்டது. துருவ ப்பகுதியில் நீர் பனிகட்டியாக இருக்கிறது. பா க்டிரீயாக்கள் போன்ற சிறு உயிரினங்கள் இருக் கலாம். தற்பொழுது உயிர் இருக்கிறதோ இ ல்லையோ எதிர்காலத்தில் நமது சந்ததியினர் வாழ ஏற்ற கிரகம்.

***400 கோடி ஆண்டுகளாகலாம்...***



செவ்வாய்க்கு அடுத்தாக சனிகிரகத்தின் சந்திர னான டைட்டன். கி.பி.1655 ல் கிருஸ்டியன் ஹூயுஜென்னால் கண்டுபிடிக்கபட்ட்து. 400 கோடி ஆண்டுகளுக்கு முன் பூமி எப்படி இருந்ததோ அதே போன்ற தன்மையில் இருக்கிறது. சனிகிரகத்திலிருந்து 12,22,000 கி.மீ. துரத்தில் உள்ளது. 180 டிகிரியில் தண்ணீர் உறைந்திருக்கிறது. அந்த கிரகம் முழுவதும் மீத்தேனும், ஈத்தேனும் நிறைந்தருக்கிறது. இக்கிரகம் உயிர்வாழ தகுதியானதாக மாற 400 கோடி ஆண்டுகளாகலாம். காத்திருப்போம்!!

*10 கி.மீ. அழத்தில் தண்ணீர் ...*



*சூரிய மண்டலத்தில் மற்றொரு நம்பிக்கை தரும் கிரகமாக வியாழன் கிரகத்தின் யூரோப்பா. வியாழன் கிரகம் மற்றொரு சூரிய மண்டலத்தை போலவே 20 க்கும் மேற்பட்ட சந்திரன்களுடன் திகழ்கிறது. வியாழனின் காந்தப்புலனும், ஈர்ப்புவிசையும் சூரியனின் ஆற்றலில் பாதியைப் பெற்றுள்ளது. யுரோப் பாவின் மேற்பரப்பில் 10 கி.மீ. அழத்தில் தண்ணீர் உள்ளது என்றும், அதன் வளிமண்டல அழுத்தம்,*

வாயுகள், தட்பவெப்பநிலை, சுழற் சிவேகம் போன்றவை டைட்டனைப் போ லவே எதிர்கால நம்பிக்கையளிக்கக் கூடியது.

## சூரியமண்டலத்திற்கு வெளியேயான உயிர்த் தேடல் ...

எதிர்காலத் தேவை விண்வெளி ஆய்வின் அடுத்த கட்ட வளர்ச்சி என்ற அடிப்படையில் சூரியமண்டலத்தில் உயிர் தேடுதல் தொட ர்ந்து கொண்டிருக்கிறது. சூரியமண்டலத்திற்கு வெளியேயான உயிர்த் தேடல் விஞ்ஞானிகள் உட்பட அறிவியல் ஆர்வம் கொண்ட அனைவ ருக்குமானது. இதன் வெளிப்பாடாகவே பறக் கும் தட்டு கதைகள். பறக்கும் தட்டுகள் உண் மையில்லை என அமெரிக்க விண்வெளி நிறு வனமான நாசா உறுதிசெய்துள்ளது. ஆனால் கென்னத் ஆர்னால்டு என்பவர் "மூன்றடி வெ ள்ளி மனிதர்கள்" என்ற நூலை வெளியிட்டு பலகோடி டாலர்கள் சம்பதித்தார். ஹர்பெர ட்ஜார்ஜ் எழுதிய "உலகங்களுக்கிடையே போ ர்" போன்ற நாவல்களும், மென்இன்பிளாக்,

மார்ஸ்ஆட்டாக், அவதார் போன்ற திரைப்ப டங்களும் வந்துள்ளன.

நாம் வாழும் பிரபஞ்சம் மிகப் பிரமா ண்டமான பிரபஞ்சத்தின் ஒருபகுதியே. இதில் உயிர்களைத் தேடுவது அசாத்தியமான பணி யாகும். பல சமன்பாடுகள், டெலஸ்கோ ப்பு கள், ஒளியுணர்கருவிகள், டிஸ்ஆண்டனா க்கள், செயற்கைகோள்கள் மூலமாக விண்வெளியில் பிற கிரகவாசிகளைத் தேடிக்கொண்டிருக்கி றார்கள்.

**வேறு கிரகவாசிகள் நிச்சயமாய் இருப்பார்கள் …**



எல்லையற்ற இந்த பிரபஞ்சத்தில் வேறு கிரக வாசிகள் நிச்சயமாய் இருப்பார்கள் என்கிறார் பிராங்டிரேக் என்ற விஞ்ஞானி. அவரின் கணிப்புப்படி நம் சூரியன் அங்கம் வகிக்கும் ஆகாயகங்கை நட்சத்திர மண்டலத்தில் 60 கோடி கிரகங்களில் உயிர் வசிக்கலாம். அதிலும் சிலநூறு கிரகங்களில் வளர்ச்சியடை ந்த உயிர்கள் வசிக்கலாம் என்கிறார். இந்த முடி வை ஒருசமன்பாட்டின் மூலம் தெளிவுபடு த்துகிறார்.

$N=n.p1,p2,p3,p4ti/t$

*N*-வெளியுலக சமுக எண்ணிக்கை, *n*- பால்வெளிமண்டல நட்ச்சத்திரங்களின் எண்ணிக்கை, *p1*-நட்சத்திரங்களை சுற்றி கிரகங்கள் இருப்பதற்கான நிகழ்தகவு, *p2*-கிரகத்தில் உயிர் தோன்றுவதற்கான் நிகழ்தகவு, *p3*-நூண்ணிய பரிணாம வளர்ச்சிக்கான நிகழ்தகவு, *p4*-நூண் தொழில் சகாப்த நிகழ்தகவு, *t1*- தொழில் கலை சகாப்த நிகழ்தகவு, *T*- பால்வெளிம ண்ட லத்தின் வயதுடன் ஒப்பிடக்கூடிய கால அளவு.

இந்த சமன்பாட்டை வைத்து கொண்டு ஆகாயகங்கை நட்சத்திர மண்டலத்தில் தேட ஆரம்பித்தால் தேடிக்கொண்டே இருக்கவேண்டியது தான்.

**விண்வெளி மனிதர்களுக்கான முதல் செய்தி ...**

விண்வெளி மனிதர்களைத் தேடுவதற்கு 'சேதி'(SETI) என்று பெயர்.(SETI- search for terrestial intelligen). 1974 நவம்பர் 16 ல் நமது சூரியனுக்கு ஓர் ஒளியாண்டு தூரத்தில் உள்ள சீரிஸ்

நட்சத்திரத்திற்கு மின் அலைகள் மூலம் விண்வெளி மனிதர்களுக்கான முதல் செய்தி அனுப்பப்பட்டது. இதில் ஒரு சிக்கல் உள்ளது. நாம் அனுப்புகிற செய்தி சரியான நட்சத்தி ரத்திற்கு போய்ச் சேருமா? சந்தேகம் தான். ஏன் என்றால் பிரபஞ்ச வெடிப்பு கொள்கைப்படி பிரபஞ்சத்தில் உள்ள அனைத்துப் பொரு ள்களும் ஒரு மையத்தை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கின்றன. நாம் செய்தி அனுப்பிய நட்சத்திரம் ஓர் ஒளியாண்டு தூரத்தில் (ஒரு நொடியில் ஒளிசெல்லும் வேகம் 1 லட்சத்து 80 ஆயிரம் கிலோமீட்டர்) இருப்பதாக வைத்துக் கொண்டால் நாம் பார்க்கும் நட்சத்திரத்தின் ஒளியானது ஓர் ஆண்டுக்கு முன் அந்த நட்சத்திரத்தில் இருந்து புறப்பட்டு வந்த ஒளியாகும். இந்த சூழ்நிலையில் நாம் செய்தி அனுப்புவதோ, பெறுவதோ மிகமிக சிரமமான பணியாகும்.வேறு என்ன தான் வழி?.
விண்வெளி மனிதர்கள் செய்தி அனுப்பினால் பெறுவதற்காக 1985 முதல் ஹார்வேர்ட் பல்கலைக்கழகத்தில் மாபெரும் அலைதிரட்டி

செயல்பட்டு வருகிறது. இதை ப்போன்று ஒளி சமிக்ஞை மூலம் செய்தி அனுப்பினால் ஒரு நொடியில் நூற்றில் ஒருப ங்கு  நேரத்தில் ஏற்படும் மாறுதல்களை பதிவு செய்ய ஒளிவாங்கி அமைத்து கண்காணி க்கிறார்கள். ஆனால் இதுவரை நாம் சந்தோச ப்படும்படியாக எந்த செய்தியும் வரவில்லை.

## அறிவுஜீவி உயிர்கள் வாழ்வது சாத்தியமே ...

நட்சத்திரங்ளை சுற்றி வருகிற கிரகங்களைக் கண்டுபிடித்திருந்தாலும் கூட ஒரு கிரகத்தில் உயிர் தோன்றி நிலைத்து பரிணாம வளர் ச்சியடைவது சாதாரண விசயம் அல்ல. பூமி தோன்றி 400 கோடி ஆண்டுகளில் 150 கோடி ஆண்டுகளாகத்தான் உயிர்த் தோற்றமும், அதிலும் சில லட்சம் ஆண்டுகளாகத்தான் மனி தப் பரிணாமமும் ஏற்பட்டுள்ளது. எப்படி இரு ந்தாலும் நமது ஆகாய கங்கையில் மட்டுமே 1 அல்லது 2 கிரகங்களில் அறிவுஜீவி உயிர்கள் வாழ்வது சாத்தியமே என்கிறார்கள் விஞ்ஞா

னிகள். பிறகு ஏன் அவர்கள் நம்முடன் தொட ர்பு கொள்ள மறுக்கிறார்கள்? சில விஞ்ஞா னிகள் சொல்வதைப்போல நம் பூமியில் இருக்கும் விலங்குகள், தாவரங்கள், பூச்சிக ளுக்கு இடையே ஏற்படும் மிகநுட்பமான தகவல் பரிமாற்றத்தைக் கூட நம்மால் புரிந்து கொள்ள முடியாத போது பிறகிரகவாசிகள் அனுப்பும் செய்திகளை நாம் எப்படி புரிந்து கொள்ளமுடியும் என்கிறார்கள்.

யாதார்த்தமாகப் பார்த்தால் இது வரை பூமியைத் தவிர வேறு எங்கும் உயிரினங் களோ, வேற்றுகிரகவாசிகளோ இல்லை. அ ரிதிலும் அரிதாக பூமியில் உயிர்கள் அதிலும் தன்னையும், தன் சுற்றுப்புறத்தையும் புரிந்து கொள்ளக்கூடிய மனிதர்கள். பிறகு ஏன் நம்மை நாம் அழித்துக்கொள்ள அணு ஆயுத ங்கள் எதற்கு? மனிதன் மனிதன் சுரண்டுவது எதற்கு? நாடு, இனம், மதம் என்ற பாகுபாடு எதற்கு? பூமியைப் பாதுகாப்போம்....

# வேற்றுகிரகவாசிகளை எப்போது நாம் சந்திப்போம்?

வேற்றுகிரகவாசிகளை சந்திக்கும் ஆர்வம் எல்லோருக்குமே அதிகம். எனவே தான் உலக முழுவதும் வேற்றுகிரகவாசிகளை சந்தித்தாக பல கிராபிக்ஸ் செய்யப்பட்ட புகைப்படங்கள். வீடியோக்கள் நாளுக்கு நாள் வெளிவந்த வண்ணம் உள்ளது. நாசா போன்ற விண்வெளிநிறுவனங்கள் கூட அவ்வப்போது புதிரான புகைப்படங்களை வெளியிட்டு பரபரப்பை கிளப்பி வருகிறது. அப்படி வெளியிடப்பட்ட நிலாவின் புகைப்படம் பெரும் வரவேற்பையும் பரபரப்பையும் உருவாக்கியது.

***நாசா காணொளி***




அமெரிக்க விண்வெளி ஆய்வு நிறுவனமான நாசா காணொளி(வீடியோ) ஒன்றை தனது இணையதள த்தில் வெளியிட்டது.அதில் நிலவில் மனித உருவம் நடப்பது போன்ற

காட்சிகள் உள்ளன.அது வேற்றுகிரகவாசியாக இருக்கலாமோ என்ற பரபரபரப்பை உலக முழுவதும் ஏற்படுத்தியது.அந்த வீடியோ யூடியுப் தளத்தில் பதிவேற்றபட்டது ... சில நாட்களிலேயே உலக முழுவதும்

20 லட்சத்திற்கு மேற்பட்டவர்கள் பார்த்து சிலர் பரவசபட்டார்கள்,சிலர் இது ஏமாற்றுவேலை என்று நம்ப மறுத்தார்கள். கடைசியில் அது வெறும் தூசுதான் என்று விளக்கமளித்து பரபரப்புக்கு முற்றுப்புள்ளி வைத்தது.

## ஒரு மர்ம பறக்கும் தட்டு

இதே போன்று அமெரிக்காவின் டெக்ஸாஸ் மாநிலத்தின் ஹௌஸ்டன் நகர வானில் மேகங்களுக்கு மத்தியில் ஒரு வித்தியாசமான பொருளைப் பல மக்கள் புகைப்படம் எடுத்து தமது டுவிட்டர் மற்றும் ஏனைய சமூகத் தளங்களில் வெளியிடுட்டுயிருக்கி றார்கள். அப்பொருள் வட்ட வடிவில் வித்தியாச மான ஒளிகளுடன் ஒரு மர்ம பறக்கும் தட்டு போன்ற தோற்றத்தில் இருந்தது .

உண்மையில் நம்மைசூற்றியுள்ள பிரபஞ்சத்தில் வேற்றுகிரகவாசிகள் இருக்கிறார்களா? அவர்களை நாம் எப்போது சந்திப்போம். இந்த கேள்வி நமக்கு மட்டுமல்ல விண்வெளி விஞ்ஞானிகளுக்கு தீர்க்கப்படாத கேள்வி...

விண்வெளி வீராங்கனை ஜோசிலின் பெல் பர்னல் அடுத்த 20 ஆண்டுகளிலிருந்து 100 ஆண்டுகளுக்குள் வேற்றுக் கிரக உயிரினங்களுடன் அல்லது மனிதனுடன் நமக்குத் தொடர்பு ஏற்பட்டுவிடும் என்று நிச்சயமாக நம்புகிறார்.நாமும் நம்புவோம்...பிரபஞ்சத்தில் நாம் பங்காளிகளை சந்திப்போம்.

# பாறை ஓவியங்களில் வேற்று கிரகமனிதர்கள்...



வேற்றுகிரக மனிதர்களை குறித்த ஆர்வம் எப்போதும் பூமியில் வாழும் மனிதர்களா கிய நமக்கு உண்டு. பரந்துவிரிந்த பிரபஞ்ச த்தில் நாம் தனியாகத்தான் இருக்கிறோமா? என்ற கவலை ? இந்த ஆர்வத்தின் வெளிப்பாடாகவே அவதார் போன்ற சினிமாக்களும் ,நிறைய நாவல்களும்

*வெளிவந்திருக்கின்றன.இணையதளங்களில் வேற்றுகிரகமனிதர்களை பற்றிய ufo -காணொலிகள் காணக்கிடைக்கின்றன.*

*அமெரிக்கா போன்ற நாடுகளில் பறக்கும் தட்டுக்கள் வந்து போவதாக அடிக்கடி உறுதிப்படுத்தபடாத செய்திகள் வருவதுண்டு. அமெரிக்கா திட்டமிட்டே தன்னைபற்றி உருவாக்கும் பில்டப்பாக இருக்கலாம்????.... ஆசிய நாடுகளில் குறிப்பாக இந்தியாவில் பறக்கும் தட்டு செய்திகள் வந்ததில்லை ... ஆனாலும் 10 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவுக்கு குறிப்பாக வடகிழக்குமாநிலமான சத்தீஸ்கர் மாநிலத்தில் உள்ள பாறை ஓவியங்களில் வேற்றுகிரகமனிதிர்களின் ஓவியங்கள் கிடைத்திருக்கின்றன.*

## ஹாலிவுட் மற்றும் பாலிவுட் படங்களில் காணப்படுவது போல்

*சத்தீஸ்கர் மாநிலத்தின் காங்கர் மாவட்டத்தில் பழங்குடி மக்கள் மிகுந்தபஸ்டார் பகுதியில்*

உள்ள சராமாபாறைகளில் காணப்படும் ஓவியங்களில் அன்னிய கிரகத்தவரும், அறியமுடியாத பறக்கும் தட்டுகளும் காணப்படுகின்றன. இந்த ஓவியங்கள் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியவை. இவற்றை ஆராய்வதற்கு நாசா மற்றும் இஸ்ரோ அமைப்புகளின் உதவியை நாட சத்தீஸ்கர் மாநில தொல்லியல் மற்றும் பண்பாட்டு துறை தீர்மானித்துள்ளது. இந்த பாறைகளில் காணப்படும் ஓவியங்களில் உள்ள அன்னிய கிரகத்தவரும், பறக்கும் தட்டுகளும் ஹாலிவுட் மற்றும் பாலிவுட் படங்களில் காணப்படுவது போல் உள்ளன என்று தொல்லியல் ஆய்வாளர் ஜே.ஆர்.பகத் கூறுகிறார். சந்தேலி, கோட்டிடோலா ஆகிய கிராமங்களில் இந்தப்பாறைகள் உள்ளன.

## சத்தீஸ்கர் பாறை ஓவியங்களில் காணப்படும் அன்னிய கிரகத்தவர்

இக்கிராமங்கள் ரெய்ப்பூரில் இருந்து 130 கி.மீ. தொலைவில் உள்ளன. அன்னிய கிரக

மனிதர்கள், தட்டுகள் போன்றவை இப்போதும் மக்களிடம், ஆய்வாளர்களிடமும் ஆர்வத்தைத் தூண்டுவது போல் அன்றும் இவை ஆர்வத்தை கிளப்பியுள்ளன. வரலாற்றுக் காலத்துக்கு முந்தைய மனிதர்கள் தாங்கள் கண்ட அல்லது தங்களுடைய கற்பனையில் உதித்தவற்றை ஓவியமாக வரைந்துள்ளனர் என்பதை இந்த ஓவியங்கள் சுட்டிக்காட்டுகின்றன. இதுகுறித்து கிராமத்தாரிடம் பல நம்பிக்கைகள் நிலவுகின்றன. பலர் இந்த ஓவியங்களை வணங்குகின்றனர். மற்றும் சிலர் தங்கள் முன்னோர்கள் இந்த சிறிய வடிவம் கொண்ட மனிதர்கள் வானில் இருந்து இறங்குவதைக் கண்டுள்ளனர் என்று கூறுகின்றனர். இவர்கள் வந்ததாக கூறப்படும் வாகனங்கள் திரைப்படங்களில் உள்ளது போல் தென்படுவது ஒரு தற்செயல் ஒற்றுமையே என்று பகத் கூறுகிறார்.இதே போன்று உலகின் பல பகுதிகளில் வேற்றுகிரக மனிதர்களைபோன்ற சிற்பங்களே உள்ளன. தலைகவசம், மூச்சு காற்றுகாக தலைகவசத்துடன் வைக்கப்படும்

குழாய்கள் போன்ற அமைப்புடன் சிலைகள் உள்ளன. ஆவ்வளவு ஏன் பிரமீடுகளே வேற்று கிரகவாசிகள் கட்டியது தான் என்கிறார்கள் சிலர். பிரமீடு சுவர்களில் காணபபடும் சிவ ஓவியங்களில் அதற்கான குறியிடுகள் இருப்பதாக ஆய்வாளர்கள் கருத்துகிறார்கள்.

# வேற்று கிரக மனிதர்களை சந்தித்த அமெரிக்க அதிபர்

அமெரிக்கா தன்னை எப்போதுமே உலக தாதவாக நினைத்துக்கொள்ளும். எல்லாவற்றிலும் தான் தான் முதலிடம் என்ற கர்வம் எப்போதும் அமெரிக்காவுக்கு உண்டு. அந்தவகையில் விண்வெளி துறையில் ரஸ்யாவுக்கு போட்டியாக நிலவில் முதன் முதலில் இறங்கியதாக அறிவித்துள்ளது. சிலர் அதைக்கூடஏற்க மறுக்கிறார்கள். அந்த வரிசையில் வேற்றுகிரக மனிதர்கள் பரந்த இந்த உலகில் அமெரிக்கர்களை அதுவும் அதிபரை சந்தித்தாக செய்தி உண்டு. அவர்களுக்கு பறக்கும் தட்டு தொழில்நுட்பத்தையும் கற்று கொடுத்தாக சொல்கிறார்கள். அமெரிக்க அதிபரை சந்தித்தாக சில புகைபடங்கள் உண்டு, அவற்றை நம்புவதா இல்லையா என்பதை

நீங்கள் தான் முடிவு செய்யவேண்டும்.



**வாயேஜர் செயற்கைகோளில்**

வேற்றுகிரகமனிதர்களை தேடும் முயற்சிகாக பல்வேறுநாடுகள் ஆய்வில் ஈடுபட்டுள்ளன. ரோடியோ அலைகளை விண்வெளியில்

அனுப்புவது. ஹாப்பிள், கெப்ளர் போன்ற விண்வெளி தொலைநோக்கிகள் மூலமாகவும் தேடுவது. மேலும் 1977 ம் ஆண்டு அனுப்பபட்ட வாயேஜர் செயற்கைகோளில் பூமி மனிதர்களின் படங்கள்,ஒலி போலைகள், சூரியகுடும்பம் குறித்த தகவல் அடங்கியதங்கததகடு பொருத்தப்பட்டுள்ளது. இந்த செயற்கைகோள் பிரபஞ்சவெளியில் சூரிய மணட்லத்தை கடந்து சென்றுகொண்டிருக்கிறது. இதை பார்ககும் வேற்றுகிரகமனிதர்கள் நம்மை தொடர்பு கொள்வார்கள் என்று விஞ்ஞானிகள் நம்புகின்றனர்.

இதனிடையே வேற்று கிரகங்களில் வாழும் மனிதர்களை அமெரிக்க அதிபர் சந்தித்த செய்தி தற்பொழுது வெளியாகிஉள்ளது.

**வேற்று கிரக மனிதர்களை மூன்று முறை சந்தித்தார் ...**



உலகம் முழுவதும் நம்பபப்படும் செய்தி வேற்று கிரகத்தில் மனிதர்கள் உள்ளனர் என்பதுதான். உலகின் பல்வேறு பகுதிகளிலும் ஆங்காங்கே வேற்று கிரக மனிதர்களோ அல்லது அவர்கள் பறந்து செல்லும் தட்டு தென்பட்டதாக செய்திகள் வரும். ஆனால் இன்று வரை அந்த செய்திகள்

உறுதிபடுத்தப்படவில்லை. இந்நிலையில் பிபிசி 2 கரண்ட் அபையர்ஸ் இல் பங்கேற்று,

அமெரிக்க பார்லிமெண்ட் உறுப்பினரும் பென்டகனின் ஆலோசகருமான பணிபுரிந்த குட் பேசுகையில், அமெரிக்காவின் முன்னாள் அதிபரான டிவைட் டி ஐசனோவர் வேற்று கிரக மனிதர்களை மூன்று முறை சந்தித்தார் என்று கூறினார்.

எப்பிஐ அதிகாரிகள் டெலிபதி தகவல் பரிமாற்ற முறை மூலம் வேற்று கிரக மனிதர்களை தொடர்பு கொண்டதாகவும், அதனை ஏற்ற வேற்று கிரக மனிதர்கள் அமெரிக்காவின் அன்றைய அதிபர் டிவைட் டி ஐசனோவரை கடந்த 1954 ம் ஆண்டு அமெரிக்காவின் நியூ மெக்ஸிகோ மாகாணத்தில் உள்ள ஹோல்மென் ராணுவ விமான தளத்தில் மூன்றுமுறை சந்தித்தனர் என கூறினார். இந்த சந்திப்பை கண்டதற்கான பல சாட்சிகள் உள்ளன எனவும் கூறியுள்ளார்.

வேற்று கிரக மனிதர்கள் உலகின் பல்வேறு பகுதிகளில் உள்ள மனிதர்களை சந்தித்துள்ளனர். இந்த சந்திப்பு குறித்த தகவல் இதுவரை மிகவும்

ரகசியமாக வைக்கப்பட்டு இருந்ததாகவும் கூறினார். ஆனால் குட் இன் இந்த பேச்சை அமெரிக்க அதிகாரிகள் இதுவரை மறுக்கவில்லை.இதுமட்டுமல்ல இதே போன்று ஜார்ஜ்புஷ் உள்ளிட்ட அமெரிக்க அதிபர்களை சந்தித்தாக கூட புகைபட்ங்கள் வெளியிடப்பட்டுள்ளன.

நீங்கள் பார்த்த படங்களும், செய்தியும் எந்த அளவுக்கு நிஜமானது எனதெரியவில்லை? .இந்த தகவலை ஒட்டி சில கேள்விகள் எழுகின்றன

**வேற்று கிகரமனிதர்கள் அமெரிக்க அதிபரை மட்டும் ஏன் சந்தித்தார்கள்?**

**1954 க்கு பிறகு அவர்கள் ஏன் வரவில்லை?**

**58 ஆண்டுகளுக்கு பின் மிகத்தாமதமாக இந்த தகவலை வெளியிட காரணம் என்ன?**

# President Eisenhower Meets The Aliens At Holloman AFB in 1955



Learn about this shocking story kept from the world for over 50 years from many of the actual people that lived it! Learn how Aliens met with President Dwight D. Eisenhower in 1955 and how they may have saved us all from a terrible Nuclear Holocost! UFO Researcher and Author ART CAMPBELL reveals the amazing details!

DVD

மேற்கண்ட படங்கள் எந்த அளவுக்கு உண்மையானவை?

இப்படி பல கேள்விகளுக்கு விடை சொல்லுமா அமெரிக்க நிர்வாகம்.

# வேற்றுக்கிரக மனிதர்களின் ஆபுர்வ புகைப்படங்கள்

*அறிவியல் முறையில் வேற்றுகிரக மனிதர்களை தேடும் முயற்சி பல்வேறு விதமாக தொடந்து நடந்து கொண்டுதான் உள்ளது. கெப்ளர் என்கின்ற தொலைநோக்கி வானிலிருந்து பிரபஞ்சத்தின் ரகசியங்களை கண்டுபிடிக்க அனுப்பட்டது.*

*பூமியில் இருந்து சுமார் 600 ஒளி வருடங்களில் உள்ள ஒரு கோள்(கெப்ளர் 22 பி) கண்டு பிடிக்கப்பட்டது . இதுவரை கெப்ளர் 22 பி போல் சுமார் 1094 கோள்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளதும் முக்கியமான் ஒன்றாகும்.மேலும் கெப்ரல் தொலைகாட்டி மூலம் 2,326 புதிய கோள்கள் அறியபப்பட்டுள்ளன. அவற்றில் 207 கோள்கள் பூமியை ஒத்தவை. பூமியை விட நான்கு மடங்கு பெரியவற்றை Super Earth என அழைக்கப்படவிருக்கின்றன.இதில் நீர் உள்ளதா,*

உயிர்கள் வாழ்கின்றனவா அல்லது வாழ இயலுமா என்பதெல்லாம் வரும் காலங்களில் அவிழ்க்கப்படும் முடிச்சுகள்

இதனிடயே பறக்கும் தட்டுகள் வருவதாக செய்திகள் பரபரப்புகள் அடிக்கடி ஏற்படுத்தப்படுகிறது. சில பறக்கும் தட்டுகளின் புகைப்படங்களும், வீடியோக்களும் கிடைத்துள்ளன. தற்போது *National Geography* சேனல் மூலமாக வேற்றுகிரக மனிதர்களின் புகைப்படங்கள் வெளியியப்பட்டுள்ளது.





சில கேள்விகள்......

பூமிக்கு வரும் வேற்று கிரகமனிதர்கள் நம்முடன் ஏன் தொடர்பு கொள்வதில்லை?

அவர்கள் தொடர்பு கொள்கின்ற மொழியில்,அல்லது முறை நமக்குப் புரியவில்லையா?

அவர்கள் பூமிக்கு வந்து செல்வதன் நோக்கம் என்ன?

நம்மை சந்திப்பதில் அவர்களுக்கு என்ன பிரச்சனை?

இந்த கேள்விகளுக்கான விடைகள் விரைவில் கிடைக்கலாம், வேற்றுகிரக மனிதர்கள் இருப்பது உண்மையானால் இன்னும் 10 ஆண்டுகளில் நிச்சயம் அவர்களுடன் நாம் தொடர்பு கொள்கின்ற வாய்ப்பு கிடைக்கும்.

# வேற்று கிரகவாசிகள் இருப்பது உண்மையே!!!-

வேற்றுகிரகவாசிகள் இருப்பது உண்மைதான் என அமெரிக்க உளவு நிறுவனம் அறிக்கை சமர்பித்திருக்கிறது.வேற்றுகிரக வாசிகள் பற்றிய தகவல்கள் அவ்வப்போது வெளிவருவதும்,பின்பு அது வதந்தி என முற்றுபுள்ளி  வைப்பதும் வாடிக்கையாக நடந்துவருகிறது. இந்நிலையில் அமெரிக்க உளவுநிறுவனமான எபி.பி.ஐ வேற்றுகிரகவாசிகள் குறித்தான நீண்ட அறிக்கையை வெளியிட்டு வதந்திகளுக்கு முற்றுபுள்ளி வைத்திருக்கிறது.

**நெப்போலியனை கடத்தியது வேற்றுகிரகவாசிகளே?**



பிரான்ஸ் நாட்டின் அன்றைய மன்னன்
நெப்போலியன் பானர்பட்டின்
மண்டையோட்டில் அரை அங்குலம் அளவுள்ள

வெளிப்பொருள் ஒன்றை ஆராய்ச்சியாளர்கள் கண்டெடுத்தனர். கி.பி 1794 ஆம் ஆண்டில் அவர் பல நாட்கள் காணாமல் போயிருந்தார். மீட்கப்பட்டபின் நெப்போலியனே, வித்தியாசமான மனிதனால் தான் சிறைப்படுத்தப்பட்டதாக தெரிவித்தது குறிப்பிடத்தக்கது.

பழங்கால எகிப்தியர்களின் சித்திரவடிவ எழுத்துக்களின் ஆய்வுகள், ஏலியன்கள் பறக்கும் தட்டுகளில் நைல் பள்ளத்தாக்கிற்கு வந்ததை உறுதி செய்கின்றன. எகிப்தில் காணப்படும் பிரமிட் அமைப்புகள் மனிதனால் உருவாக்கியிருக்க சாத்தியமே இல்லையென்றும், அவையெல்லாம் ஏலியன்களால் உருவானவை என்று கூறுபவர்கள் பலர்.

**வாய்திறக்க மறுக்கும் நாசா...**

விபத்தில் மாட்டிக்கொண்ட பறக்கும் தட்டு,அதில் பயணம் செய்த வேற்றுகிரகமனிதர்களின் உடல்களை அமெரிக்க

ரகசியமாக பாதுகாப்பதாக ஏற்கனவே தகவல் உண்டு. பறக்கும் தட்டின் தொழில்நுட்பத்தை தெரிந்து கொள்வதற்காக அமெரிக்கா அவற்றை மூடி மறைப்பதாக வதந்தியா? உண்மையா? என தெரிந்து கொள்ளமுடியாத தகவல்கள் உலவுகின்றன.

பூமிக்கு மேலே ஒளிரும் அடையாளம் தெரியாத பொருள் ஒன்று தோன்றியதை சர்வதேச விண்வெளி நிலையத்தில் இருந்த கேமரா பதிவு செய்துள்ளது. ஆனால், அக்காட்சிகளை நாசா எடிட் செய்து விட்டதாக வேற்றுகிரகவாசிகள் குறித்து ஆராய்ச்சி செய்பவர்கள் குற்றம் சாட்டியுள்ளனர். விண்வெளி மற்றும் வேற்றுக்கிரகவாசிகள் குறித்த ஆய்வு சர்வதேச அளவில் நடந்து வருகிறது. இந்நிலையில் சர்வதேச விண்வெளி நிலையம் மற்றும் பிற செயற்கைக்கோள்களில் இருந்து பூமி மற்றும் பிற கிரகங்களின் தோற்றம் படங்களாக எடுத்து அனுப்பப்பட்டு வருகிறது. அவற்றை எடிட் செய்து நாசா வெளியிட்டு வருகிறது. சமீபத்தில் செயற்கைக்கோள்கள் அனுப்பிய

புகைப்படங்களில் செவ்வாயில் நண்டு, பெண் உருவம், பறக்கும் தட்டு போன்றவைக் காணப்பட்டதாக பரபரப்புத் தகவல்கள் வெளியாயின. ஆனால், அது குறித்து நாசா வாய் திறக்கவில்லை.

1971 ஆம் ஆண்டு அப்போல்லோ 14 திட்டப்பணியின் அங்கமாக நிலாவில் காலடி வைத்த ஆறாவது மனிதர் என்ற பெயரை பெற்றவர் நாசா விண்வெளி வீரர் எட்கர் மிட்செல்.

அமெரிக்காவின் நியூ மெக்சிகோவில் உள்ள ரோஸ்வெல் பாலைவனத்தில் 1947- ல் நடந்த விபத்தில் யூ.எப்.ஒ எனப்படும் அன்ஐடெண்டிபைட் பிளைட் ஆப்ஜக்ட், அதாவது பறக்கும் தட்டில் வந்த ஏலியன்கள் இருந்திருக்கின்றனர் என்று மிட்செல் உறுதியாக கூறுகிறார்.

இறந்த ஏலியன் புகைப்படம் ஒன்று அமெரிக்க பத்திரிக்கைகளில் வெளியானது. அது ஒரு குழந்தையின் சடலம் என்று கூறுபவர்கள் பலர்.

ஆனால் மிட்செல் கூறுகிறார், “ரோஸ்வெல்லில் நடந்த சம்பவத்தை நான் நேரில் பார்த்தேன். என்னுடைய கல்லூரிக்கு சென்றுகொண்டிருந்தபோது இந்நிகழ்வு நடந்தது. நான் நிலாவிற்கு சென்று வந்ததும் பல கருத்தரங்கில் பேசும்போது 'அது' ஏலியன் தான் ...குழந்தையின் சடலமல்ல ..என்று கூறியிருக்கிறேன். அமெரிக்க அதிகாரிகள் ரகசிய இடத்தில் 'அதை' பாதுகாத்து வருகின்றனர். என் குடும்ப நண்பரும் அமெரிக்க விமானப்படையின் மேஜர் ஆகவும் இருந்தவர், இது ஏலியன் தான் என்று உறுதிப்படுத்தினார். நிலாவில் இருந்து திரும்பிய பின், பெண்டகனுக்கு சென்று அங்குள்ள அதிகாரிகளிடம் என்னுடைய கதையை கூறி அவர்களின் கருத்தை கேட்டேன்.

அவர்கள் நியூ மெக்ஸிகோவிற்கு சென்று ஆராய்ந்துவிட்டு, நீங்கள் கூறியது அனைத்தும் உண்மையே என்றனர். அமெரிக்க அரசு, பறக்கும் தட்டு விபத்தில் உயிருடனும், சடலமாகவும் ஏலியன்களை கண்டுபிடித்தது.

ரோஸ்வெல் சம்பவத்தை அமெரிக்கா மூடி மறைப்பதற்கு காரணம், ஏலியன்ஸின் வருகை நம்மை எதிர்க்கின்ற நோக்கத்துடன் இருந்திருக்கலாம் என்றும், ரஷ்யா இதைப்பற்றி கண்டுபிடித்துவிடக்கூடாது என்ற அமெரிக்காவின் விருப்பமாக இருந்திருக்கலாம் என்றும் கூறுகிறார்.

## வேற்றுகிரகவாசிகள் பற்றி அமெரிக்க உளவுத்துறை



..

அமெரிக்காவின் உளவுத்துறை அமைப்பான எப்பிஐ வேற்று கிரகவாசிகள் பூமியில் இறங்கியதாக கூறி அதற்கான ஆவணங்களை

*தனது vault.fbi.gov இணையதளத்தில் வெளியிட்டுள்ளது.அமெரிக்க உளவுத்துறை எப்.பி.ஐ தற்போது ஏலியன்கள் குறித்து வெளியிட்ட சில ஆவணங்கள் உலக விஞ்ஞானிகளை ஆச்சரியப்படுத்துவதாக அமைந்துள்ளது. எப்.பி.ஐ வெளியிட்டுள்ள அறிக்கை மற்றும் ஆவணங்களின் படி பூமிக்கு எண்ணற்ற வேற்று கிரக உயிரினங்கள் வருகின்றன. இதில் சில வகை பரிணாம வளர்ச்சி பெற்று, முந்தைய ஏலியன் படங்களில் இருந்து மாறுபட்டவையாக உள்ளன. நவீன விமானங்கள் மூலமும் வந்து உள்ளன என்று கூறி ஆச்சரியம் ஏற்படுத்துகிறது அந்த அறிக்கை.*

*அந்த ஆவணங்களில் உள்ள முக்கிய அம்சங்கள்:*

*1) பறக்கும் தட்டுக்கள் குழுவாக பூமிக்கு வருகிறது. மற்றவர்கள் தொலை கட்டுபாட்டின் கீழ் உள்ளனர் (under remote control)*

*2) அவர்களின் குறிக்கோள் அமைதியானதாக உள்ளது.வந்தவர்கள் விமானத்தை நிலை நிறுத்த ஆழ்ந்து சிந்திக்கின்றனர்.*

3) வந்தவர்கள் உருவத்தில் மனிதர்களைப் போல் உள்ளனர். ஆனால் மிகப்பெரிய வடிவில் உள்ளனர்.

4) அவர்கள் பூமியில் உள்ள மனிதர்களை தவிர்க்க வில்லை. ஆனால் அவர்கள் தங்களது சொந்த உலகத்தில் இருந்து வந்து உள்ளனர்.

5) அவர்கள் பூமியை பயன்படுத்தி கொள்ள இங்கு வரவில்லை.ஆனால் அவர்கள் எந்த கிரகத்தில் இருந்து வந்து உள்ளார்கள் என்பது அறியகூடிய வகையில் இல்லை.

6) அவர்கள் வந்த பறக்கும் தட்டுகள் கதிரியக்க ஆற்றல் அல்லது ஒருவகை கதிர் வீச்சை பெற்றிருக்கின்றன. அதன் மூலம் தாக்கவரும் எந்தவிதமான கருவிகளை எளிதில் உடைக்ககூடியது.

அவர்கள் தங்கள் விருப்பப்பட்ட போது பூமியில் உள் நுழைவார்கள். மேலும் வந்த சுவடே இல்லாமல் சாதாரணமாக நம் பார்வையில் இருந்து மறைந்து விடுவர்.

7)அவர்களை ரேடியோ மூலமாகவோ ராடார் மூலமாகவோ அவர்கள் இயந்திரத்தை அடைய முடிய வில்லை.

8.ஒரு வெப்பத்தை தாங்கி கொள்ளும் உலோக குழல் வடிவத்தில் உள்ளது. இன்னும் முன் பகுதி கூண்டு கட்டுப்பாடுகள் அறியப்படவில்லை. நடுவில் பரிசோதனைகூடம் உள்ளது. பின்புறம் போர் தளவாடங்களை கொண்டு உள்ளது.அவை அடிப்படையில் ஒரு சக்தி வாய்ந்த ஆற்றல் இயந்திரத்தை, கொண்டுள்ளதாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

மேலும் அவர்களது வாகனம் ஓவல் வடிவில் உள்ளதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.

## வேற்றுகிரகவாசிகளை நேருக்கு நேராக சந்திக்க முடியுமா?

அமெரிக்க உளவுநிறுவனம் தனது அறிக்கை மூலம் வேற்றுகிரகவாசிகள் இருப்பதை உறுதி செய்திருந்தாலும் கூட அவர்களை நேருக்கு நேராக சந்திப்பதும்,கை குழுக்கி வரவேற்பதும்

*எப்போது நடக்கும் என்பது தற்போதைய கேள்வியாக உள்ளது.*

*வானவியல் நிபுணர்கள், சூரிய குடும்பத்திலிருந்து வெகு அப்பாலிருந்து வரும் ரேடியோ சிக்னல்களைக் கொண்டு ஏலியன்ஸ் வாழ்க்கையை அறிய தொடர்ந்து முயன்று வருகின்றனர்.*

*ஆராய்ச்சியாளர்கள் அமெரிக்கா மற்றும் ஆஸ்திரேலியாவில் உள்ள உலகின் சக்தி வாய்ந்த டெலஸ்கோப்பை கொண்டு பால்வெளியையும் விண்மீன்களையும் ரேடியோ சிக்னல்கள் பெற முடியுமா என்று தீவிரமாக சோதனை செய்து வருகின்றனர். ஜூலை 21, 2015 அன்று ரஷ்ய கோடீஸ்வரர் யூரி மில்னர், (break through initiatives) 'சாதனை முறியடிப்பு முயற்சிகள்' என்ற அமைப்பை, பூமிக்கு அப்பால் ஏதேனும் கிரகத்தில் உயிரினங்கள் உள்ளதா என கண்டுபிடிக்க 100 மில்லியன்ஸ் டாலரில் ( சுமார் 650 கோடிகள்) உருவாக்கியுள்ளார்.*

இது 10 வருட திட்டமாகும். இந்த திட்டத்திற்கு பிரபல வானவியல் ஆராய்ச்சியாளர் ஸ்டீபன் ஹாக்கிங் தனது ஆதரவை தெரிவித்துள்ளார். இவர் வேற்றுகிரகவாசிகள் இருப்பது உறுதியானால், நாம் அவர்களுடன் தொடர்பு கொள்ளாமல் இருப்பதே நல்லது என்று கூறி வந்தவர் என்பது குறிப்பிடத்தக்கது. 'சாதனை முறியடிப்பு முயற்சிகள்' அமைப்பானது அதிக சக்தி வாய்ந்த தொலைநோக்கிகள் மூலம் சூரிய மண்டலத்திற்கு அப்பால், நமக்கு நெருக்கமாக உள்ள 100 விண்மீன் கூட்டங்களில் ஏலியன்ஸ் இருப்பதற்கான அறிகுறிகள் தென்படுகிறதா என்பதை ஆராயும்.

இந்த அமைப்பின் தொடக்க விழா நிகழ்ச்சியில் பேசிய ஸ்டீபன் ஹாக்கிங் "ஏதோ வேற்று கிரகத்தில் உள்ள ஒரு புத்திசாலி உயிரினம் நம் பூமியில் மின்னும் விளக்கொளிகளை கவனித்துக் கொண்டிருக்கலாம். இதன் அர்த்தம் என்னவென்று அதற்க்கு தெரிந்திருக்கலாம். பூமிக்கு அப்பால் வேற்றுகிரக உயிரினத்தை

கண்டுபிடிக்க நாம் தீவிரமாக ஈடுபடும் நேரம் வந்துவிட்டது'' என்று கூறினார்.

இந்த அமைப்பின் நோக்கம், வேற்று கிரகத்திலிருந்து ரேடியோ சிக்னல் வந்தால் அதை அதிநவீன தொலைநோக்கியை பயன்படுத்தி கண்டறிவதுதான். வேற்றுகிரகவாசிகளை கண்டுபிடித்தபின், அவர்களிடம் எந்த வகையில் செய்திகளை அனுப்பலாம் என்று சொல்பவர்களுக்கு 10 லட்சம் டாலர்கள் ( சுமார் ரூ.6.5 கோடிகள்) பரிசுத்தொகையும் அறிவித்துள்ளது இந்த அமைப்பு.

இந்த சூழ்நிலையில் தான் அமெரிக்காவின் நாசா அமைப்பு கடந்த ஜூலை 23, 2015 அன்று ஒரு புதிய கிரகத்தின் புகைப்படத்தை வெளியிட்டுள்ளது. பூமியை போலவே உள்ள அந்த கிரகமானது, பூமியை விட 60% பெரியது. கெப்லர் தொலைநோக்கி மூலம் கண்டுபிடிக்கப்பட்ட அந்த கோளுக்கு கெப்லர் 452 b  என பெயரிட்டுள்ளது. அது சுமார் 1400 ஒளி

ஆண்டுகள் தொலைவில் அமைந்துள்ளது. அது நமது சூரியனை போன்றே அமைந்துள்ள ஒரு நட்சத்திரத்தை சுற்றி வருவது மட்டுமில்லாமல், பூமியின் சுற்று வட்டப்பாதையின் தொலைவைப்போலவே அதன் தொலைவும் அமைந்து உள்ளதாக நாசா விஞ்ஞானிகள் தெரிவித்துள்ளனர்.

இந்த புதிய கிரகத்தில் உயிரினங்கள் உள்ளதா இல்லையா என்று ஆய்வுகளை மேற்கொள்ள இருகின்றனர்.

அயல்கிரகவாசிகளை பற்றிய பட்டிமன்றம் கடந்த சில மாதங்களாகவே உலக அறிவியல் அரங்கில் சூடுபிடித்து இருக்கிறது. இதில் இன்னும் சூடேற்றியிருக்கிறார் அமெரிக்க விண்வெளி அமைப்பான, 'நாசா'வின் தலைமை விஞ்ஞானியான எல்லன் ஸ்டோஃபான். 'பூமிக்கு அப்பால் உயிர்கள் இருக்கிறதா என்பதை பற்றி இன்னும் பத்து ஆண்டுகளில் அறிகுறிகள் தெரிந்துவிடும் என்றே நான் நினைக்கிறேன். இன்னும் 20 லிருந்து 30

ஆண்டுகளுக்குள் திட்டவட்டமான ஆதாரங்களும் கிடைத்துவிடும்' என்று எல்லன் தெரிவித்தார். அத்தோடு அவர் நிற்கவில்லை. 'எங்களுக்கு எங்கே தேடவேண்டும்; எப்படி தேடவேண்டும் என்பது தெரியும். அதற்கு தேவையான பெரும்பாலான தொழில்நுட்பங்கள் எங்களிடம் இருக்கிறது. அவற்றை களமிறக்கும் நிலையில் நாங்கள் இருக்கிறோம். நாங்கள் நிச்சயம் சரியான பாதையில்தான் போய்க்கொண்டிருக்கிறோம் என்று நினைக்கிறேன்' என்று அழுத்தம் திருத்தமாக எல்லன் பேசியிருக்கிறார்.

வரும் காலங்களில் ஏலியன்ஸ் கண்டுபிடிக்கப்படலாம். சாதி,மதம், நாடு கடந்து நடக்கும் திருமணத்தைப்போல கிரகம் கடந்தும் திருமணம் நடக்கலாம்.